# “கலியுக கடிகாரம்”




[சிறு குழந்தைகள் அட்லாஸில் இந்தியா, சிலோன், ரங்கூன், ஜப்பான், ஆஸ்ட்ரேலியா, அமெரிக்கா, க்ரீன்விச்சு, லண்டன், ரஷ்யா, முதலிய ஊர்களைப் பார்ப்பது போல், இந்தப் படத்தில் 360 பாகைகளில் 27 நட்சத்திரங்களையும், 12 ராசிகளையும் அவைகளில் நவக்ரஹங்கள் ஊர்ந்து வருவதையும் பார்த்துத் தெரிந்துகொள்ளுவார்கள்]

பிரசுரிப்பவர்:

ஜட்ஜ் முத்துஸ்வாமி அய்யர் வேதபாடசாலையில் அத்யயனம் செய்தவரும்,
தஞ்சாவூர் வக்கீல் சிவஸ்வாமி அய்யருடன் வேதபாஷ்யம் பார்த்தவருமான

**மாயவரம் V. சுப்பிரமணிய சாஸ்திரிகள்**

**நெ. 2, அஜிஸ் நகர், கோடம்பாக்கம், மதறாஸ்-24.**

1964 ] கலிகதம் 5064 [ விலை ரூ. 1-00

# புஸ்தகம் எழுதிய நோக்கங்கள்

——( ೦ )——

காலத்தைக் கணிப்பதற்கு அடிப்படையான வழிகள். கலியுகம் என்பதைக் கணித முறையில் தெரிந்து கொள்வது, கிழமைகள் கண்டு கொள்வது, அஞகரீகமான காலம், வேதகாலம், புராண காலம், பௌத்தமத காலம், சங்கரர் காலம், இவைகளை ஆராய்ந்து கொள்வது. வித்யாரண்யர் காலம், வித்யாரண்யரால் கட்டப்பட்ட சிருங்கேரியில் உள்ள வித்யா சங்கரர் ஆலயம், ஆலய நிர்மாண விஷயங்கள்.

இந்துதேச சரித்திரத்தை வெள்ளைக்காரர்கள் எழுதிவைத்ததை ஹிந்துமத பெரியோர்கள் ஒப்புக்கொண்டார்களா? இந்து தேச சரித்திரத்தை மேல்நாட்டார்கள் B. C. கிருஸ்துவிற்கு முந்தி என்றும், A. D. கிருஸ்துவுக்குப் பிந்தி என்றும் எழுதி வைத்திருப்பதைப் படிப்பதால் நமது தேசசரித்திர ஆராய்ச்சியாளர்கள், கணிதசாஸ்திர ஆராய்ச்சியாளர்கள் உண்மையைக் கண்டுகொள்ள முடியவில்லை. மேல்நாட்டார்கள் நமது தேசத்திற்கு வருவதற்கு முந்தி இந்தியாவில் காலத்தை எந்த முறையில் கணித்திருந்தார்களோ அதையே எழுதிவந்தால் வேதகாலம், உபநிஷத்காலம், புராண காலம், பௌத்த, சங்கர காலங்கள் அவைகளின் தத்வங்கள், உண்மை விஷயங்கள் ஆராய்ச்சியாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் புரியும்.

புஸ்தகத்தைப் படிப்பவர்கள் எழுத்துப் பிழைகளையும், ஆராய்ச்சி விஷயங்களின் கோர்வைகளையும் கவனித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

முக்கிய நோக்கம்

**பூமி சூரியனைச் சுற்ற வில்லை. கல்வியில் இதுதான் கவனிக்கப்படவேண்டும். இந்த ஒரே விஷயத்திற்காகவே என் ஆராய்ச்சிகள்.**

—ஆசிரியர்.

# Astronomical Research

——(o)——

Astronomy is the record of time passed.

The vedas originated from Astronomy

Ramayana and Mahabharatha are written with Astronomy as base

Hindu Astronomy had Almanacs casted

From the casting of Almanacs, prediction of the effects of time and birth on beings has been possible

As he determines the birth of Rama in Kataka Lagna and Navamsa and when the Sun was in Mesha, Valmiki was a perfect Astronomer.

As Vedavyasa fixes the birth of Lord Krishna in vrishaba Lagna and Navamsa, he is like-wise a perfect Astronomer.

Effects of the transit of the 27 stars and the 9 moving planets differ with each house of 30 degrees of their 360 degree orbit.

The Earth is not taken as a planet, nor is the origin of day night determined.

Reckoning time up to date with Tithy, Vara (day) and Nakshathra (stars), Researchers would do well to go to the time of the originators Valmiki or Vedavyasa for a regular probe in to the Science.

***V. Subramania Sastrigal***

**MAMBALAM PUROHIT,**

ASTROLOGER and ASTRONOMER, MADRAS-24.

## விளையாட்டு

குழந்தைகள் விளையாடுவார்கள். ரயில்கண்டு பிடித்து உல்லாச மாக ஏறிச்செல்லுவது விளையாட்டுதான். ஆகாய விமானத்தில் பறந்து செல்லுவதும் விளையாட்டான ப்ரயாணம். விண்வெளியில் சென்றுவிட்டு பூமியில் இறங்கி வருவதும் விளையாட்டுத்தான். சந்திரமண்டலத்திலோ சுக்ரமண்டலத்திலோ இறங்கி மனிதன் பார்த்து விட்டு வந்து விட்டால் விளையாட்டு அல்ல.

## பூமி ஆடுகிறது (பூகம்பனம்)

பூமி ஆடுவதால் வீடுகள் இடிந்து விழுந்து மனிதர்கள் அகப்பட்டுக் கொள்ளுகிறார்கள். பூமி முழுவதும் ஆடுகிறதா? இல்லை. பூமி ஆடுவதை பூமியைத்தாங்கும் திக்கெஜங்கள் (யானைகள்) அசைந்து கொடுக்கின் றன என்றார்கள் அந்தக்காலம்.

## கிரிகோரி காலண்டர்

**கலீலியோவும், காலண்டரும்**—கலீலியோ தீவ்ரமான வானசாஸ்திர ஆராய்ச்சியாளர். அவர் காலத்தில் அவருக்கு 18 வயது ஆகும் போது காலண்டரில் 10 நாட்கள் தள்ளி வைக்கப்பட்டது. ஏன் என்று ஆராய்ச்சி செய்தார். அவருக்கு ஒருநாள் எப்படி உண்டாகிறது என்று கண்டு கொள்ள முடியவில்லை. அந்த நாள் வானசாஸ்திரிகள் சூரியன் ஊர்ந்து செல்லுகிறான் என்பதை மாத்திரம் சொன்னார்களே தவிர பூமி சுற்றி வருவதாகச் சொல்லவில்லை. இரவு பகல் உண்டாவதற்கும் விளக்கம் கொடுக்கவில்லை. இப்பவும் விளக்கம் ஆகிவிடவில்லை. இந்தியாவி லிருந்துதான் வான சாஸ்திரம் வெளிநாடுகளுக்குச் சென்றது என்பது ஒப்புக்கொண்டால் ஆராய்ச்சியாளர்கள் விளங்க வைக்கலாம்.

## பசுக்கள்

நவக்ரஹ தேவதைகள் பசுக்கள் எனப்படும். சூரியோதயத்திற்கு முந்தி அவைகளை மேய்ப்பதற்கு விடவேண்டும். மேயவிட்டதை பகலில் நிழலில் தங்குகிறதா? தண்ணீர் கிடைக்கிறதா என்று கவனிக்க வேண்டும். சூரியாஸ்தமனத்திற்கு முந்தி கொட்டிலில் யஜமானருடைய பசுக்களை சேர்த்துவிடவேண்டும். —சந்தியாவந்தனம

## கொம்பு முளைப்பது

பசுக்களுக்கும் ஆட்டிற்கும் மாட்டிற்கும், 10 மாதத்தில், கொம்பு முளைக்கிறது. மானுக்கு 12 மாதத்தில் கொம்பு முளைக்கிறது. புலிக்கும் சிங்கத்திற்கும் கொம்பு இல்லை. சிரத்தையோ அச்ரத்தையோ கர்மா (க்ருஷி) செய்தால் பலன் உண்டு.

## ஈச்வரன்

அறிவால் ஈச்வரனைக் காணவேண்டும். அறிவுக்கு எட்டின தடைய மான நவக்ரஹங்களை வைத்துக்கொண்டு கலி என்ற யுக வஸ்துவில் ஈச்வரன் காணப்படவேண்டும். —வேதம்

## ஸங்க்ஷேபம்

வேதாங்க ஜோதிஷ கணித ஆராய்ச்சியின் ஸங்க்ஷேபம்.

---

குழந்தை V. சுப்பிரமணிய **சாஸ்திரிகள்**
மாம்பலம் வைதீக சமாஜத்தலைவர், கோடம்பாக்கம், மதராஸ்-24.

ஸ்ரீ ராமஜெயம்

# பஞ்சாங்க கணிதம்

——(O)——

தற்காலம் பஞ்சாங்க கணிதம் இரண்டு விதமாக இருக்கிறது. வேத காலத்திலிருந்து வருவது வாக்யப் பஞ்சாங்கம். வாக்யப் பஞ்சாங்கம் கணிப்பது எப்படி என்பதை தெரிந்து கொள்ள இந்த சின்ன புத்தகத்தை வெளியிட்டிருக்கிறோம். பஞ்சாங்க கணிதம் என்பது பரம்பரை சொத்து என்று நினைக்கிறார்கள். தற்காலம் திருக்கணிதம் என்னும் பஞ்சாங்கம் வெளிவந்து விட்டது. இரண்டையும் ஒருவர் கணிக்கக் கற்றுக் கொண்டால் உண்மை கணிதம் புரியும். திருக்கணிதத்தை சிரமப்பட்டு கணித்து விட்டார் மஹான். வாக்ய கணிதப்படி, க்ரஹணத்தில் சில நுட்பங்களும், போதாயன அமாவாசையும், க்ரஹ சஞ்சாரத்தில் சில விஷயங்களும் பிசகு என்று கண்ணில் எடுத்துக்காட்டப் பட்டது. மன்னார்குடி பெரியவாளும், திருவிசநல்லூர் பெரியவாளும் சோதித்துப் பார்த்து இரண்டு கணிதத்திலும் தவறுகள் காணப் படுவதால் இந்த கணித சாஸ்திரம் வருங்காலத்தில் கணித்துப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றார்கள்.

குறிப்பு :- திருவிசநல்லூர் பெரியவாள் ராகுக்ரஸ்த கிரஹணம்தான் அனுஷ்டிக்கப்பட வேண்டும் என்றார்கள். கிரஹணத்தைக் கணிப்பவர்கள் ராகு கணிதத்தால் தான் கிரஹணத்தை அறிந்து கொள்ளுகிறார்கள். வேத, சாஸ்திர, ஆராய்ச்சியாளர்கள் சுலபமாக பஞ்சாங்க கணிதத்தைத் தெரிந்து கொள்ளலாம். ஜோதிஷர்கள் கணித நுட்பம் அறிய வேண்டும்.

—லீலாவதி

## கிழமைகள்

கிழமைகள் ஏழு. ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி. இவைகளை வானத்தில் பார்க்கிறோம் சூரியன் உதயமானதும் வாரம், கிழமை ஆரம்பிக்கப் படுகிறது. சூரியோதயத்திற்கு சூரியோதயம் ஒரு நாள், ஒருகிழமை, ஒரு வாரம் என்கிறோம் "நமது தேசத்தில்". பூமண்டலத்தில் அனேகமான காலம் ஆதியில் இருந்திருக்கவேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் நினைக்கிறார்கள்.

கிழமை எப்பொழுது யாரால் கண்டு பிடிக்கப்பட்டது. வான சாஸ்திர ஆராய்ச்சியில் வாரம், நட்சத்திரம், திதி மூன்றும் இணை பிரியா

மல் கண்டு பிடிக்கப்பட்டதாக ஆகிறது. நமது தேசத்தில் ராமாயணம், பாரதம் என்ற கதைகள் நடந்ததாகவும் முன் யுகங்களில் நடந்ததாகவும் நம்புகிறார்கள். சிந்தனையாளர்களும் எழுத்தாளர்களும் ஆராய்ச்சி செய்து வால்மீகி, வேத வியாசர் என்ற எழுத்தாளர்களின் கல்பனையே ராமாயணம் பாரதம் என்று, தினசரிப் பத்திரிகைகளிலும், வாரப்பத்திரிகைகளிலும், மாதப் பத்திரிகைகளிலும் எழுதுகிறார்கள்.

வால்மீகி, ராமர் ஜனனம் சித்திரை மாதம், சுக்லபக்ஷம், நவமி, புனர்ப்பூச நட்சத்திரம், ஐந்துக்ரஹ உச்சங்கள், கடக லக்னம் என்று குறிப்பிடுகிறார். இதில் கிழமையை குறிக்கவில்லை. இது திரேதாயுக கல்பனை. சிந்திக்கவும். வேதவியாசர், கிருஷ்ணர் ஆவணிமாதம், கிருஷ்ணபக்ஷம் ரோஹிணீ நட்சத்திரம் விருஷப லக்னத்தில் ஜனனம் என்று குறிப்பிடுகிறார். வேதவியாசரும் கிழமையை குறிக்கவில்லை. இரண்டு மஹரிஷிகளும் பிரபவாதி 60 வருஷங்களில் வருஷத்தை குறிக்கவில்லை. கிழமையையும் குறிக்கவில்லை. சிந்தனையாளர்கள் இவர்கள் காலத்தை தெரிந்து கொள்ளவேண்டும்.

வேத காலம் என்பது அனுகரீகமான காலத்திற்கும் புத்தர் காலத்திற்கும் மத்தியில் உள்ளது. புத்தர் காலம் கலியுகத்தில் உள்ளது. புத்தர்காலத்தை குறிப்பிடும் போது B. C. 567 என்கிறார்கள், தேச சரித்திரக் காரர்கள். புத்தர் கிருஸ்துவுக்கு முந்தி 567 வருஷங்கள் என்கிறார்கள். தற்காலம் AD. 1963 வருஷங்கள் என்கிறோம். கிருஸ்துவுக்குப் பிறகு 1963 வருஷங்கள் ஆகி வருகிறது. சுமார், குறிப்பாக 2530 வருஷங்களுக்கு முந்தி புத்தர் காலம் நிச்சயப்படுகிறது. புத்தர் காலத்தில் வேதம் வாழ்ந்தது, வேதம் படிக்கப் பட்டது, வேதோக்தமானயாகம் நடந்தது என்பது தெளிவாகிறது. அனுகரீகமான காலம் எது. வேத வியாசரும், வால்மீகியும் நாகரீகமான காலத்தை விரும்பியவர்கள். இவர்கள் 4 வேதத்தையும் வான சாஸ்திரத்தையும் ஜோதிஷ சாஸ்திர பலனையும் தெரிந்து கொண்டவர்கள். இப்போதும் ராமாயணம், பாரதம் படிக்கும் போது வித்வான்கள் ஜோதிஷ பலனை "ராமாயண, பாரத," திருஷ்டாந்தம் காட்டிச் சொல்லுகிறார்கள். யார் நம்பவில்லை !!

கிழமைகள் எப்படி வந்தது. வானத்தில் ஊர்ந்து வரும் க்ரஹங்கள் ஏழு. (1) சூரியன், (2) சந்திரன், (3) அங்காரகன், (4) புதன், (5) குரு, (6) சுக்கிரன், (7) சனி, இவைகள் ஏழும் ஊர்ந்து வருகின்றன. "சூரியன்" ப்ரகாசத்தால் ஊர்ந்து வருவது தெரியவில்லை. மற்ற க்ரஹங்கள் நட்சத்திரத்தின் அடையாளத்தால் ஊர்ந்து வருவது தெரிந்து விடுகிறது. சூரியன், தெற்கும், வடக்கும் ஊர்ந்து வருவது தெரிகிறதே தவிர கிழக்கு மேற்கில் ஊர்ந்து வருவது தெரியவில்லை.

## வேதகாலமும் அனுகரீகமான காலமும்

அனுகரீகமான காலத்திற்கு ஓர் எல்லை காணவேண்டும். இதில் சிரமம் இருக்கிறது. நடந்து வருவது கலியுகம். நடந்தது த்வாபரயுகம் அதற்கு முந்தி திரேதாயுகம், அதற்கும் முந்தி கிருதயுகம். கலியுகத்திற்கும், த்வாபர யுகத்திற்கும் மத்தியான யுக- கிழமை கண்டு விட்டால் சிரமம் நீங்கும் சிந்திக்க! கலியுகம் வெள்ளிக்கிழமையில் ஆரம்பிக்கப்பட்டது என்று ச்லோகம் இருக்கிறது. இது கவனம். பாஸ்கராசாரியரால் கவனம் செய்யப்பட்டது. இன்று பஞ்சாங்கத்தைப் பார்த்து திதி, வாரம், நட்சத்திரம் தெரிந்து கொள்ளுகிறோம் என்றால் பாஸ்கராசாரியாரின் கணிதமேயாகும். வால்மீகியும், வேதவியாசரும் இவருடைய கணிதத்தைக்கொண்டு ராமாயணம், பாரதம் எழுதினார்கள். நட்சத்திரம் திதி, எடுத்துக்கொண்டார் என்றால் இம் மூவரின் காலமும் ஒத்துவரவில்லை. பாஸ்கராசாரியார் காலம் தேசசரித்திரப்படி B.C. 1062 ஆகிறது. வால்மீகி, வேதவியாசர் காலத்தில், கிழமைகள் கண்டுபிடிக்கப்படவில்லை என்றால் எந்த சாஸ்திரங்களும் ஆராயத்தகுந்ததாக ஆகாது. சூக்ஷமம் கண்டுகொள்ள வேண்டும்.

## எப்படி உண்டாகிறது நக்ஷத்திரம்

ராமர் பிறந்தது புனர்வஸு நட்சத்திரம்—புனர்பூசம் ஆகும். இதன் தேவதை அதிதி என்பதாகும். சித்திரை மாதம் சுக்ல பக்ஷம் நவமி திதி. வால்மீகி மஹரிஷி 60 வருஷங்களை எண்ணுவார் என்றும், மாதங்கள், ருதுக்கள், அயனங்கள், திதி, நட்சத்திரம், தேவதை தெரிந்துகொண்டவர் என்பதும் புலப்படும் போது கிழமையும் எண்ணத்தெரியும் என்பது புலப்படுகிறது. படிக்கும் நாம் "தான்" சூக்ஷமம் விளக்கவேண்டும். வேதவியாசரையும் வால்மீகி மஹரிஷியைப் போலவே எண்ணவேண்டும். இரண்டுபேர் காலமும் இரண்டு கண்கள். ஒரே மனிதன் என்பதாகச் சிந்தித்தல் வேண்டும். கிருஷ்ணர் பிறந்தது ரோஹிணீ நட்சத்திரம், கிருஷ்ண பக்ஷம் அஷ்டமி ஆவணி மாதம்.

பொதுவாக வால்மீகி, வேதவியாசர்களால் திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம், கணிக்கும் விதத்தை நாம் அனுகரீகமானகாலத்திற்குப் பிறகு வேத காலத்திலேயே தெரிந்து கொள்ள முடிந்ததாக எண்ணுகிறோம்.

## நக்ஷத்திரம்

**நட்சத்திரங்கள் 27**—இந்த 27 நட்சத்திரங்களிலும் சந்திரன் ஊர்ந்து வர 27 நாள் 8 மணிகள் ஆகிறது. சந்திரன் ஊர்ந்து வரும் வழியை வைத்துக் கொண்டே நட்சத்திரப் பெயர்கள் 27 கொடுத்திருக்கிறார்கள்.

இந்த 27 பெயர்களும் வேதத்தில் காணப்படுகிறது. வேதத்தில் காணப் படும் பெயர்களையே பஞ்சாங்கத்தில் குறிக்கிருர்கள். வான சாஸ்திரத் திற்கு மூலப் பொருள் வேதம். நட்சத்திரங்கள் தங்கள் இருப்பிடத்தை விட்டு நகராது, அசையாது. நகர்ந்து காணப்படுமேயானல் அவைகள் க்ரஹங்கள் எனப்படும். செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி இவை களை நட்சத்திரம் என்று ஊஹித்துச் சொல்லும்போது அவைகள் க்ரஹங் கள் எனப்படும்.

**வேதத்திற்கு கௌரவம்**—வால்மீகியும், வேதவியாசரும் நட்சத்திரங் களின் பெயர்களை பாரதத்திலும் ராமாயணத்திலும் குறிப்பிடுவதால் வேதம் தெரிந்தவர்கள் என்று ஊஹிக்கிரேம். வேதத்தை எழுதியவர், வேதத்தை உண்டு பண்ணினவர் என்று யாரும் சொல்லிக் கேட்க வில்லை. ஊஹித்துப் பார்க்கலாம். ராமாயணத்தில் சில ஆகாச வர்ணனை யை படிக்கும்போது, இயற்கையை வால்மீகி அன்று கண்டது போலவே இன்றும் காண்கிரேம். ராம லக்ஷ்மணன், பரத சத்ருக்னன் நால்வரும் பூரட்டாதி உத்திரட்டாதி போல் (4 நட்சத்திரங்கள்) ப்ரகாசிக்கிருர்கள், சித்திரா நட்சத்திரமும் சந்திரனும் போல் அரண்யத்தில் ஸீதையும் ராம னும் என்று இயற்கையை உதாஹரணம் கொடுத்திருக்கிருர். இன்றும் அதேபோல் நாம் வானத்தில் பார்த்துத் தெரிந்து கொள்ளுகிரேம். புனர் பூச நட்சத்திரம். 7 நட்சத்திரக் கூட்டத்தால் கப்பல் அடிபாகம் போல் பிரகாசிப்பதை புனர்பூசத்தில் சந்திரன் ஊர்ந்து வரும்போது வானத்தைப் பார்த்து சந்திரன் மிதுனராசியில் இருக்கிருனு? கடகத்தில் இருக்கிருனு? என்று கண்டு சொல்ல முடியாது. சந்திரகதியை கணக்கிட்டுத் தான் சொல்லவேண்டும். வால்மீகி, ராமர் கடக லக்நத்தில் கடக சந்திரன் வந்தபிறகு ஜநித்தார் என்ருல் கணித சுத்தம் நன்ருகத் தெரிந்திருக்க வேண்டும். புத்தர் காலத்திற்கு முந்தியும் வேதகால ஆரம்பத்திலும் வால்மீகியையும் வேதவியாசரையும் ஆராய்சியாளர்கள் கண்டு கொள்ள வேண்டும்.

**அனுகரீகமான காலம்**— கணித காலம் வந்ததும் அனுகரீகமான காலம் சென்று விட்டது. கணித காலம் வேதத்தின் பரிபூர்ணமான காலத்தை ஒப்புக்கொள்ளுகிறது. கலியுக ஆரம்ப தினம் வெள்ளிக் கிழமை. இது ஊஹிக்கப்பட்டது "கிழமை"

**க்ரஹங்கள் 7**— ஏழும் அச்வதி நட்சத்திரத்தில் புறப்பட்டது. புறப் பட்ட காலத்திலிருந்து கணித காலம்வரை அனுகரீகமான காலம். கலி ஆரம்பித்து இன்று 5064 வருஷங்கள் வரை நடந்தது, நடப்பது 5065 என்பதாகும். புத்தர் 2530 வருஷங்களுக்கு முன் பிறந்தவர். 2535

வருஷங்களுக்கு முந்தி வேத காலம் எனப்படும். கலியுக ஆரம்பத்திலிருந்து 2535 வருஷங்களில் வேதகால தீர்மானம் அகப்படும். கணித சாஸ்திர முறைப்படி முன் யுகம் சேர்க்கப்பட முடியாது. வால்மீகியும், வேதவியாசரும் இந்த யுகத்தைச் சேர்ந்தவர்கள்தான். அவர்கள் வயது, வாழ்ந்து வந்த ஊர், அவர்கள் தாய் பாஷை, அவர்களுக்கு வேதம் கிடைத்த வழி, அவர்களுக்கு கல்வி முறை கிடைத்தது என்பவைகள் ஆராயப்படவேண்டும். அவர்கள் இந்த தேசத்தில் யாத்திரை செய்த இடங்கள், பூமண்டலத்தில் யாத்திரைசெய்த இடங்கள் ஊஹிக்கப்பட வேண்டும்.

கலியுகத்தில் ஒரு நாள்— மேல் நாட்டார்கள் நமது தேசத்திற்கு கடிகாரம் என்று மணி காட்டும் கருவியை கொடுத்திருக்கிறார்கள். சுமார் 200 வருஷ கால பழக்கமாக கடிகாரப்படி நம்புகிறோம். 24 மணி ஒரு நாள், 1 மணிக்கு 60 நிமிஷம், 1 நிமிஷத்திற்கு 60 செகண்ட். இந்தக் காலப் பழக்கத்தை கடிகாரத்தில் பார்த்து காலத்தை நடத்திக்கொள்ளுகிறோம். (நல்ல காலம் நல்லவேளை ராகுகாலம் எமகண்டம் தியாஜ்யம்) கடிகாரம் இல்லாத முன் காலத்தில் கலியுகத்தில் ஒரு நாளில், ஒரு நாளுக்கு 60 நாழிகைகள், ஒரு நாழிகைக்கு 60 விநாடிகள், ஒரு விநாடிக்கு 60 தர்ப்பரைகள். 7 நாள் ஒரு வாரம், 30 நாள் ஒரு மாதம், 365 நாள் ஒரு வருஷம். 1461 நாள் 4 வருஷம். துல்யமான கணிதம் பண்ணும்போது மேஷ ராசியிலிருந்து மறுபடியும் மேஷத்தில் சூரியன் வரும்போது 365 நாள் 15 நாழிகைகள் 31 விநாடிகள் 15 தர்ப்பரைகள் ஆகிறது. சூரியன் ஊர்ந்து வருவதை ஊஹித்து கவனிக்கவும். ராமர் கடக லக்நத்தில் ஜனித்தார் கணித சாஸ்திர ஆராய்ச்சிப்படி. (1) ராமர் யுகாதி 15 வருஷங்கள் முடிந்து 16 வது வருஷத்தில் பிறக்கவேண்டும். (2) சித்திரை மாதம் 9-ம் தேதியில் தான் ஜனிக்க வேண்டும். (3) அன்று சுக்ல நவமி யாகத்தான் இருக்கவேண்டும். (4) சூரியன் மேஷத்தில் நிற்கும். (5) சனி துலாத்தில் நிற்கும். (6) குரு கடகத்தில் வந்து விடும். (7) ராகு விருச்சிகத்தில் நிற்கும். இந்த ஊஹத்தை ஒவ்வொரு யுக 16 வது வருஷத்திலும் ஊஹிக்கலாம் (நாம் ஒரு யுகத்தையாவது ஆதியோடு அந்தமாய் வித்வான்களைக் கொண்டு கணித முறை பிசகாமல் ஆராய்ந்து தெளிய வேண்டும்) கடக லக்னம் எத்தனை நாழிகைக்கு உதயம்? சித்திரை மாதம் 9-ம் தேதிக்கு மேஷத்தில் $1\frac{1}{2}$ நாழிகை சென்று விட்டது. மேஷத்தில் மீதம் 3 நாழிகைகள் விருஷபத்தில் $4\frac{3}{4}$ மிதுனத்தில் $5\frac{1}{4}$ ஆக 13 நாழிகைக்கு மேல் $13\frac{1}{2}$ நாழிகைக்குள் ஸ்ரீராம ஜனனம் ஊஹிக்கப்படுகிறது. சித்திரை மாத சுக்ல பக்ஷ நவமியும் புனர்வசு நட்சத்திரமும் சேராது. பங்குனி மாதத்தில் சுக்ல நவமியும் புனர்பூச நட்சத்ரமும்

சேர்ந்தால் சூரியன் உச்சமாகாது. ராமர் ஜனன விஷயத்தில் பௌராணிகர்கள் ஜோதிஷ விஷயத்தை ஆராயும்போது சிரமம் ஏற்படுவது ஸகஜம். வால்மீகியின் காலத்தைத் தெரிந்து கொண்டு சாஸ்திர வழியில் ஆராய வேண்டும். கிருஷ்ண ஜனனம் ஆவணி மாதம் கிருஷ்ணாஷ்டமி, ரோஹிணீ நட்சத்திரம், விருஷபலக்னம், விருஷப நவாம்சம். ஆவணி மாதம் 19-ம் தேதியில் கிருஷ்ண ஜனனம் ஊஹிக்கவும். சிம்மத்தில் 3 நாழிகை சென்று விட்டது, மீதம் 2 நாழிகைகள். கன்னி 5 துலாதி 30 மேஷம் $4\frac{1}{4}$ விருஷபம் $4\frac{3}{4}$ ஆக 46 நாழிகைகள். நடுநிசி சமீபம். இப்படி லக்னம் வேதவியாசராலும், வால்மீகியாலும் குறிப்பிட்டபடியே ஜோதிஷ கணிதர்கள் "ஒவ்வொருவருக்கும்" கணித்து வருகிறார்கள். எழுத்தாளர்கள் வேதவியாசரையும் வால்மீகியையும் அவர்கள் நோக்கம், அவர்கள் காலம் அறியவேண்டும். 12 ராசிகள் அல்லது 12 லக்னங்கள் அல்லது 12 மாதங்கள் ஒரே நாளில் 12 லக்னங்கள் உதயமாவது போல் கணிக்கிறோம். ஒரு லக்னம் 5 நாழிகை நீளம் உள்ளது. ஒரு நாளுக்கு 60 நாழிகைகள். சூரியோதயத்திலிருந்து மறு நாள் சூரியோதயம் வரை 60 நாழிகைகள். தமிழ் வருஷப்பிறப்பில் சூரியன் மேஷலக்னத்தில் உதயமாகிறது. இதை வைத்துக்கொண்டே வால்மீகி ராமர் கடக லக்னத்தில் ஜனனம் என்று கணித்தார். வேதவியாசரும் இந்த கணிதத் தொடர்பை அனுசரித்தே கணித்திருக்கிறார். திதி, வாரம், நட்சத்திரம் கணிக்கத்தெரிந்தவர்கள் லக்னத்தையும் கணிக்கிறார்கள்.

## பள்ளிக்கூட பாடங்கள்

தற்காலம் பள்ளிக்கூடங்களில் (உலக குழந்தைகளின் கல்வி) (1) பூமி தன்னைத்தானே சுற்றுகிறது, (2) பூமி சாய்ந்தும் நிமிர்ந்தும் சுற்றுகிறது, (3) பூமி தன்னைத்தானே சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றுகிறது, (4) பூமி சூரியனைச் சுற்றும் போது சந்திரனையும் ஆகர்ஷித்துக் கொண்டு சூரியனைச் சுற்றுகிறது, (5) சந்திரன் பூமியைச் சுற்றுகிறது. (6) சூரியனை புதன் சுற்றுகிறது, (7) சூரியன், புதன் இரண்டையும் சுக்கிரன் சுற்றுகிறது, (8) சூரியன், புதன், சுக்கிரன் மூன்றையும் பூமி சந்திரனை ஆகர்ஷித்துக்கொண்டு சுற்றுகிறது (9) சூர்யன், புதன், சுக்கிரன் சந்திரன், பூமி, இந்த ஐந்தையும் செவ்வாய் சுற்றுகிறது, (10) இந்த ஆறையும் குரு சுற்றுகிறது, (11) இந்த ஏழையும் சனி சுற்றுகிறது என்று பள்ளிக்கூட பாடங்களில் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. இவர்களுக்கு, யுக ஆரம்பம் என்பதோ, கால ஆரம்பம் என்பதோ சொல்லிக்கொடுக்கப் படவில்லை. எந்தக்கிழமை ஆரம்பம் என்றும் அதன் ஆராய்ச்சியையும் விளக்கவில்லை. கிருஸ்துவுக்கு முந்தி என்றும்

கிருஸ்துவுக்குப் பிந்தி என்றும் 12 மாதங்கள் 365 நாள் 6 மணி என்ற வருஷ அளவையும் சொல்லிக்கொடுக்கிருர்கள். இரவு பகல் எப்படி உண்டாகிறது என்ற கேள்வி எழுப்பப் பட்டது. கலீலியோ என்பவர் தான் இதற்குக் காரணமானவர். அனேகர் மனதில் நினைத்தாலும் இதை வெளியிட்டுக் கேட்டவர் கலீலியோதான். இவர் கிருஸ்துவுக்குப் பிறகு 1563-ல் பிறந்தவர். கலியுகாதி 4663-ல் பிறந்தவர். வால்மீகி, கலியுகாதியிலிருந்து வேத கால ஆரம்பத்திலேயே பிறந்தவர். அநாகரீக மான காலத்தைத் தாண்டி நாகரீக காலத்தவர். கலீலியோவிற்கு 3000 ஆண்டுகள் முந்தியவராகக் கருதலாம். வால்மீகி, வானசாஸ் திர கணித நுட்பங்களையும் நக்ஷத்ரங்களின் தேவதைகளையும் அதன் ரூபங்களையும், நவக்ரஹங்களையும் அதன் சுப, அசுப குணங்களையும், அவைகளின் சஞ்சாரங்களால் ஏற்படும் சுப, அசுபங்களையும், ராமாயண கதை மூலமாக மறைத்து இன்றும் படித்து புத்திக்குத் தகுந்தவாறு அனு பவிக்க எழுதிக்கொடுத்தார். அதில் இரவு பகல் எப்படி உண்டாகிறது என்பது விளங்க வில்லை. தற்காலம் பள்ளிக்கூடப் படிப்பில் இரவு பகல் என்பதை கற்பிக்கும் விதம், (1) பூமி தன்னைத்தானே சுற்றுகிறது. இத ஞல் இரவு பகல் உண்டாகிறது. பூமி மேற்கிலிருந்து கிழக்காக அந்த ரிக்ஷத்தில் (ஆகாசம்) சுற்றுகிறது. சுற்றும் வழியில் சூரிய, சந்திர நக்ஷத் திரங்கள் காணப்படுகிறது. இது ஒரு நாள், இது சுலபமான பதில் இல்லை. இதை ஒப்புக்கொள்ளுகிறோம். ஒப்புக்கொண்டு மேலும் விசா ரித்து தீர்மானித்து பிள்ளைகளுக்கு போதிக்கவேண்டும்.

உபாத்தியாயர்களின் கடமை— பிள்ளைகளுக்கு முதலில் கிழமை கண்டு பிடிக்கக் கற்றுக்கொடுக்க வேண்டும். பிறகு நக்ஷத்திரம் கண்டு பிடிக்கவும் திதி கண்டு பிடிக்கவும் கற்றுக் கொடுத்து இரவு, பகல் உண் டாவதை குளோப்பை வைத்து மனதில் புரியும்படியாகக் கற்றுக் கொடுக்க வேண்டும். இரவு, பகல் உண்டாவதை மாத்திரம் கற்றுக் கொடுத்து திதி, வாரம், நட்சத்திரம் கண்டு பிடிக்க முடியாமல் மேல் நாட்டு படிப்புப்படி வான சாஸ்திரம் கற்றுக் கொடுத்தால் வானசாஸ் திரம் பூர்த்தியாகாது.

**இங்கிலீஷ் வருஷத்திற்கும் தமிழ் வருஷத்திற்கும் உள்ள வித்தியா சங்கள்—** இங்கிலீஷ் வருஷத்திற்கு 365 நாள் 6 மணி ஒரு வருஷ பிரமாண காலமாகும். தமிழ் வருஷத்திற்கு 365 நாள் 15 நாழிகைகள் 31 விஞடிகள் 15 தர்ப்பரைகள் வருஷ அளவு ஆகும். இங்கிலீஷ் வருஷத்தை விட $12\frac{1}{2}$ நிமிஷ காலம் கூட தமிழ் வருஷ அளவு இருக்கும். 115 வருஷத்திற்கு 1 நாள் தமிழ் வருஷத்திற்கு குறைந்துவிடும். ஏப்ரல் 14-உ வருஷப்பிறப்பு 13,12-ல் குறைந்து காணப்படும் (ஊஹிக்கவும்).

உலகம் பூராவும் கிழமைகள் ஒன்றுதான். மூன்று மதங்களும் வெள்ளிக்கிழமையை உயர்ந்ததாக எண்ணுகிறது. உலகம் தோன்றி எவ்வளவு காலமாகிறது? பத்திரிகை வாயிலாக உலகம் தோன்றி 195 கோடி வருஷங்கள் இருக்கலாம். அனுகரீகமான மனிதர்கள் தோன்றி சுமார் லக்ஷம் வருஷம் இருக்கலாம். நாகரீகமான மனிதர்கள் தோன்றி பதினாயிரம் வருஷம் இருக்கலாம் என்று சில சிந்தனை எழுத்தாளர்கள் மூலமாக பத்திரிகைகளில் படிக்கிறோம். புராண வாயிலாக எல்லையில்லாத காலமாகவும், எல்லைக்குள் அகப்பட்ட காலமாகவும் ரகஸ்யமாகப் படிக்கிறோம். சாஸ்திர வாயிலாக எல்லை காணப்படுகிறது. புராண வாயிலாக எல்லை இல்லை. கல்பங்கள், மன்வந்தரங்கள், சதுர்யுகங்கள் இவைகள் அளவிட முடியாத உலகத் தோற்ற விஷயங்கள். வானசாஸ்திரம், கணிதம், ஜோதிஷம் என்று ஒரு சாஸ்திர வழியில் உலகத்தோற்றத்தை கவனிக்கும் போது உலகம் தோன்றி இன்றைக்கு 5064 வருஷங்கள் தான் ஆகிறது. இதற்கு கணித சாஸ்திர ப்ரத்யக்ஷம் இருக்கிறது. சாஸ்திர வாயிலாக புராணங்களைப் பார்க்க வேண்டும். புராண வாயிலாக சாஸ்திர பலம் கட்ட முடியாது. சாஸ்திரங்கள் வேதத்தை அனுசரித்தே இருக்கும். வேதம் நமக்கு எப்படி கிடைத்தது? உலகம் தோன்றிய பிறகு கிடைத்தது. உலகம் எப்படி தோன்றிற்று? உலகம் என்பது பூமி. பூமி தன்னைத்தானே சுற்றிற்று, தன்னைத்தானே சுற்றுவதால் உருண்டையாக மாறிற்று. உருண்டையாக மாறிச் சுற்றும்போது சூரிய கிரணம் பூமியின் மேல் விழுந்து இரவு பகல் உண்டாயிற்று. உலகம் தோன்றிற்று. பூமி தன்னைத்தானே சுற்றுவதால்தான் ஒரு நாள் உண்டாகிறது. ஒரு நாள் என்பது 24 மணி அல்லது 60 நாழிகைகள். சூரியன் கிழக்கில் உதிக்கிறது, மேற்கில் அஸ்தமிக்கிறது. மறுபடியும் உதய, அஸ்தமன கால அளவு ஆனதும் கிழக்கில் சூரியன் உதிக்கிறது. இது ஈச்வரன் கட்டளை. இது ஒரு நாள். சூரியன் ஒவ்வொரு நாளும் பூமியைச் சுற்றி வருகிறது. இப்படி உலகம் தோன்றி அனுகரீகமான காலம்வரை நம்பப் பட்டது. நாகரீகமான வேதகாலத்தில் நக்ஷத்திரங்கள் நகர வில்லை. சூரியன் தினம் ஒரு பாகை ஊர்ந்து செல்லுகிறது. வான சாஸ்திர கணித நுட்பங்கள் க்ரஹ சஞ்சார பலாபலன்கள் எழுதப்பட்டது. அவைகளை வைத்துக் கொண்டு புராணங்கள் எழுதப் பட்டது. சூரியன் தினம் ஒருபாகை தூரம் ஊர்ந்து செல்லுவதும், நக்ஷத்திரம் நகருததும் விளக்கமாக எழுதியபோது பூமி முழுவதும் இரவும் பகலும் ஏற்படுவதால் பூமி மேற்கிலிருந்து கிழக்காகச் சுற்றுகிறது என்று ஊஹிக்க இடம் இருக்கிறது. பூமி தன்னைத்தானே சுற்றிக்கொள்ளுகிறது என்பதை வேத பண்டிதர்களோ புராண ப்ரவசன வித்வான்களோ தெரிந்துகொள்ள முடியவில்லை. பிறரை தூஷிக்க எழுதப்படவில்லை. ஆராய்ச்சிக்காக எழுதியதையே

திரும்ப திரும்பச் சேர்த்து எழுதப்படுகிறது. பூமியை சூரியன் தினம் சுற்றி வரவேண்டும் என்று ஈச்வரன் கட்டளை இட்டார் என்று விட்டு விட்டால் ஆராய்ச்சிக்கு இடமே இல்லை. ஆராய்ச்சியாளர்கள் ஈச்வரன் கட்டளை என்பதை பரிகசிக்க காது கேட்டுக் கொள்ளுமா? பட்டுப்பூச்சி ஒரு புழுவை வைத்து அதன்மேல் கூடு கட்டிவிடுகிறது. பூச்சி பறந்து விடுகிறது. உள்ளே இருக்கும் புழு, தான் பலம் பெற்றதும் வெளியே வந்து விடுகிறது. உலகம் தோன்றினதும் அநாகரீகமான காலமும் பட்டுப்புழு கூட்டில் இருப்பது போல் எண்ணவும். நாகரீகமான காலம் என்றால் வேத காலத்திலிருந்து கலீலியோ காலம்வரை வைத்துக்கொண்டு அதற்குமேல் விக்ஞான காலத்தில் புத்தியைச் செலுத்துவோம். ஈச்வரன் கட்டளை, பட்டுப் பூச்சி புழுவை வைத்து கூடு கட்டுவது. இயற்கையில் புழு கூட்டைவிட்டு வெளிவருவது விக்ஞானம். மனிதன் பட்டுப் பூச்சி கூட்டைக் கொண்டு பட்டு சேகரிக்க புழுக் கூட்டை வென்னீரில் போட்டு பட்டு சேகரித்து ஜீவனம் செய்வது இதில் செயற்கை காணப்படுவது போல், பூமி தன்னைத்தானே சுற்றுவது செயற்கை. பூமி தன்னைத் தானே சுற்றுவது ஒரு நாள். பூமி ஓர் உருண்டை வடிவ முள்ளது. இதை விக்ஞான காலத்தில் தான் தெரிந்து கொண்டோம். இந்த புத்தகத்தில் மனிதர்கள் பூமண்டலம் முழுவதும் அளந்து விட்டோம் என்பதே, விக்ஞான காலமாகக் குறிப்பிடுகிறோம். பூமி 25000 மைல்கள் கிழக்கு, மேற்கு வளையமாகும். அதன்மேல் மனித சஞ்சாரம் வீடு கட்டி வாழ்ந்து வருகிறோம்; நாம் சிந்திக்கிறோம். அனேக பாஷைகள் இருந்தாலும் ஒன்று சேர்ந்து சிந்தித்து புரியும் பாஷையில் வெளியிடுகிறோம். உண்மையிருந்தால் பிரகாசிக்கும். நாம் பட்டுப்புழு போல் ஒரே மனித ஜாதியின் புத்தியில் நாம் பிரகாசிப்போம். பூமி ஒரு சுற்று சுற்றுகிறது சூரியன் ஒரு பாகை தூரம் சென்று விடுகிறது. பூமி 30 சுற்று சுற்றுகிறது; சூரியன் 30 பாகைகள் சென்று விடுகிறது. வேத காலத்தவர் இதை ஒரு மாதம் என்று நிச்சயித்தார். 365 தடவை பூமி சுற்றிக்கொண்டது; சூரியன் 360 பாகைகள் தூரம் சென்று ஆரம்ப இடத்திற்கு வந்து விட்டது என்கிறார் வேத காலத்தவர். இவர்கள் காலம் 3000 வருஷங்களுக்கு முந்தியதாக ஊஹிக்க முடிகிறது. பெரிய யந்திரங்கள், எஞ்சின்களில், கடிகாரத்தில் ஒரு சக்கரம் சுற்ற ஆரம்பித்தால் அதை அனுசரித்து மற்ற சக்கரங், களும் சுற்றுவது போலவும், அதன் கர்த்தாவின் காரணம் என்னவோ அதை யந்திரங்கள், எஞ்சின்கள், கடிகாரங்கள் அனுசரிப்பது போல் பூமி சுற்ற ஆரம்பித்ததும் சூரியனும் மற்ற க்ரஹங்களும் வானத்தில் அதன் கர்த்தாவின் எண்ணம்போல் சுற்றி காலத்தைக் காட்டுகிறது. இன்று வரை கால, க்ரஹ, க்ரஹண கணிதத்தில் பிசகவில்லை.

## இன்று கிழமை என்ன?

பூமி தன்னைத்தானே 18,50,000 தடவைகள் சுற்றி விட்டது. கலி யுக ஆரம்பத்தில் வெள்ளிக்கிழமை என்றால் இன்று கிழமை என்ன? ஒரு வாரத்திற்கு 7 நாட்கள். 7 ஆல் வகுத்தால் வாரங்கள் வரும். மீதம் இருப்பதை எண்ணி கிழமை காண வேண்டும்.

| | |
|---|---|
| 7 \| 18,50,000<br>2,64285—5 நாட்கள் | கலியுக ஆரம்பத்தில் பூமி ஒரு சுற்று சுற்றினதும் வெள்ளிக் கிழமை முடிந்தது. பூமி 18½ லக்ஷம் தடவை தன்னைத் தானே சுற்றிக் கொண்டதும் செவ் வாய்க்கிழமை முடிந்தது. |

மனிதர்கள் விஞ்ஞான விஷயத்தில் ரொம்பவும் முன்னேறி இருக்கிறார்கள். சந்திர மண்டலத்திற்கு யாத்திரை செய்ய வழி கண்டு கொண்டிருக்கிறார்கள். அடிப்படை கால ஆராய்ச்சியை அறிந்து கொண்டு க்ரஹ மண்டலயாத்திரை செய்தால் சிந்தனையில் சிக்கல் இருக்காது. வேத காலம்தான் பரிபூர்ணமான ஆராய்ச்சி காலம். வேத காலத்திற்கு முந்தியும் பிந்தியுமாக 5064 வருஷங்கள் நடந்து விட்டது. பட்டுப்பூச்சியின் எச்சிலால் கட்டிய கூடு இழை அறுகாமல் பட்டு நூல் எடுப்பதுபோல் கால ஆரம்பத்திலிருந்து இன்றுவரை ஒரு விநாடி கூட விடாமல் கணிக்க வேதாங்க கணித ஆராய்ச்சி பயன்படுகிறது. இந்த கணித ஆராய்ச்சி நல்ல பிரசாரத்தை அடைய வில்லை.

## பஞ்சாங்க கணித ஆராய்ச்சி.

கிழமைகள் நமக்கு வெளி தேசத்திலிருந்து வந்தது என்கிறார்கள். காலம் குறிப்பிடப்படுவதில்லை. வராஹமிஹிரர் பிருஹத் ஜாதகம் என்னும் புஸ்தகத்தை எழுதியிருக்கிறார். அதில் ரோம் க்ரீக் சம்பந்த மான பதங்கள் காணப்படுவதால் ஜோதிஷ க்ரந்தங்கள் வெளிநாட்டி லிருந்து வந்தது என்கிறார்கள். ஆழ்ந்த கருத்துக்களை வெளியிடும் போது மனிதர்களின் ஆத்மசிந்தனையைத் தொட்டு அனுபவிப்பதுதான் சுகம். வாக்யம், திருக்கணிதம், பரஹிதம் இந்த மூன்று பஞ்சாங்க கணி தங்களும் வேத காலத்தோடு சேர்ந்தே வந்தது. இதில் வாக்யத்தை வேதம்போல் படித்து திதி, வார, நக்ஷத்திர யோக, கரணங்களை 2½ நாழிகைகளில் கணித்து விடுவார்கள். வேதம் போல் அத்யயனம் செய்த வாக்யமே சுலபமாக இருக்கிறது.

ஆகமம், வைகாநஸம், பாஞ்சராத்ரம், சில்பம் இவைகள் வேதாங்க ஜோதிஷ கணிதத்தை ஆதாரமாகவைத்துக் கொண்டு ப்ரகாசிக்கிறது.

சிவன் கோவில்களில் செய்யப்படும் பூஜைகள் உத்ஸவங்கள் ஆகமம். விஷ்ணு கோவில்களில் செய்யப்படுவது வைகாநஸம், பாஞ்சராத்ரம் எனப்படும். சில்பம்— கோயில் நிர்மாணம், விக்ரஹ நிர்மாணம், வாஹன நிர்மாணம் எனப்படும்.

ஆலய நிர்மாணம்— முன் யுகத்தில் கட்டிய கோவில்களை நாம் எங்கும் பார்க்க வில்லை. இந்த யுகத்தில் அநாகரீகமான காலம் என்று 500 வருஷங்கள் தள்ளிவிடலாம். பிறகு வேதகாலங்கள். இந்தக் காலத்தில் யாகங்கள், வர்ணாச்ரமங்கள் என்று ஊஹிக்க முடிகிறது. வர்ணாச்ரம காலத்தில் ஸ்த்ரீகளுக்கு கற்பு அவசியம் என்றும் அதை வேதோக்தமாகக் காப்பாற்றியது. யுக ஆரம்பத்திலிருந்து 2500 வருஷங்களுக்குப் பிறகு புத்தர் காலம். இந்தக் காலத்தில் யாகம் பசுவதை கூடாது என்று அறிவில் புகத்தப் பட்டது. புத்தமத பிரசாரம் இருந்து வந்தாலும் வேதம், வேதாங்கம் ஓலைச்சுவடியிலும், வம்ச பரம்பரையிலும் காப்பாற்றப் பட்டது. நமது தேச, சரித்திர வாயிலாக கலியுகாதி 3800 வருஷத்திற்குப் பிறகு சங்கரர் மதம் தோன்றிற்று. சங்கரர் மதம், ஆத்மா ஒன்று, ஆத்மா சாகாது. இந்த சூரிய, சந்திரர்கள் உள்ள மட்டும் ஆத்மாவுக்கு அழிவு இல்லை. யாகத்தில் செய்யப்படும் வபா ஹோமம் ஈச்வரார்ப்பணம் என்று வேத மதத்தை ஸ்தாபித்துக் கொடுத்தது. கிழமைகள் உலகம் பூராவும் மனிதர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டாலும் ஸ்த்ரீகள் விஷயத்தில் கவலையைக் காட்டியிருக்கிறது. இதனால் மதங்கள் ஏற்பட்டு விட்டது. சங்கரர் அத்வைதமத ஸ்தாபனம் செய்தார். லிங்க பூஜைகள் ஆரம்பிக்கப்பட்டது. ஆலய நிர்மாணம் செய்ய ஆசை பிறந்தது. ஸ்தபதிகள் ஆலயம் கட்ட கால கணிதம் க்ஷேத்ர கணிதம், ஜோதிஷ பலன் தெரிந்து கொண்டார்கள். பிறகு வைஷ்ணவாலயம் வைஷ்ணவ பிரசாரம், மத்வ பிரசாரம் எல்லாம் ஏற்பட்டது. தேச சரித்திரம்—தஞ்சாவூர் ஆலயம் 900 வருஷங்களுக்கு முந்தி கட்டப்பட்டது. தஞ்சாவூர் பிருஹதீஸ்வரர் ஆலயம் கணித ப்ரகாரம் ஸ்தபதியால் கட்டப்பட்டது. உயரமான கோபுரம். இந்த கோபுரத்திற்கு பகல் 12 மணிக்கு நிழல் பூமியில் விழாது. பகல் 12 மணிக்கு நிழல் விழாதது ஆச்சர்யமா? சூரியன் 6 மாதம் தெற்கிலும், 6 மாதம் வடக்கிலும் செல்லுகிறது. வருஷத்தில் 2 நாள் தலைக்கு நேராக சூரியன் வரும். அந்த 2 நாட்களில் தான், தன்னிழல் தன்னோடு நிற்கும். 900 வருஷத்திற்கு முந்தி கட்டிய கோபுரம். அந்த நாளில் சூரியன் பூமியைச் சுற்றி வருகிறான் என்ற ஞானத்தைத் தவிர பூமி தன்னைத்தானே சுற்றிக் கொள்ளுகிறது என்ற ஞானத்தை பொதுவாக அடைந்து விடவில்லை.

வட்டமான கிணற்றை பகல் 12 மணிக்கு கவனித்து வந்தால் சூரியன் நிழல் விழும் வழி தெரிந்து விடும். பூமி சாய்வதாலும் நிமிர்ந்து சுற்றுவதாலும் கோபுரத்தின் நிழல் அதன்மேலேயே விழுந்து விடவில்லை. கோபுர அடி தளத்திலிருந்து அதன் உச்சிவரை உள்ள உயரமும் அதற்குத்தகுந்த சுற்றளவுமே கோபுர நிழல் பகல் 12 மணிகளில் அதன்மேலேயே தங்குகிறது. 900 வருஷத்திற்கு முந்தி செய்த ஸ்தபதியின் ஆராய்ச்சி கோபுரம் உள்ளவரை நீடிக்கும்.

ஆலய நிர்மாண ஸ்தபதிகள், ஆலய நிர்மாணம் செய்ய நல்ல முகூர்த்தத்தைக் கண்டு, சிலாகர்ஷணம், வாஸ்து பூஜை செய்வார்கள். தற்காலம் போல் பஞ்சாங்கம் விலைக்கு வாங்கமுடியாது. ஜோதிஷ கணிதர்களிடம் சென்று கணித்துத்தான் தெரிந்துகொண்டு ஆலய நிர்மாணம் செய்வார்கள். திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம், நேத்ரம், ஜீவன் பார்த்து சகலஜன க்ஷேமங்களுக்காக ஆலய நிர்மாணம் செய்யப்படும். இவ்வளவும் ஆகம, பாஞ்சராத்ர, வைகாநஸ சாஸ்திரங்களில் காணப்படும்

**சூரிய நாராயண பூஜை**— சில கோவில்கள் கிழக்கு முகமாகக் கட்டப்படும் மூல லிங்கத்தில், பங்குனி புரட்டாசி மாதங்களில் காலை சூரியோதயத்தில் சூர்ய ரச்மி லிங்கத்தில் விழும். சூரிய பூஜை நடக்கும்.

## வித்யாரண்யர்

ஆதி சங்கரருக்குப் பிறகு வித்யாரண்யர் நான்கு வேதத்திற்கும் பாஷ்யம் செய்து கொடுத்திருக்கிறார். வேத, சாஸ்திர, புராணப் பிரவசனங்கள் செய்பவர்கள் வித்யாரண்யர் வழியாகவே வால்மீகி, வேதவியாசர், சங்கரர் இவர்களைத் தெரிந்து கொள்ள முடியும். மனித வர்க்கத்திற்குத் தாய் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் வேத, சாஸ்திர புராணங்களுக்கு வித்யாரண்யர். தாய்களுக்கு குழந்தைகளை வளர்க்கத் தெரியும். தாயும் குழந்தையாக இருக்கும்போது எப்படி வளர்க்கப்பட்டாள். இதற்கு எல்லை கிடைக்கவில்லை. காலத்திற்கு எல்லை கிடைத்து விட்டதால் ஈச்வரன் பிரார்த்தனைதான் எல்லை. அரண்யம் என்றால் காடு. மனதில் வெறும் திடலான பூமியைப் பார்க்கிறோம். மழை பெய்த பிறகு செடிகள் கொடிகள், பெரிய மரங்கள், சமீப மலைகள் எல்லாம் புழுக்களையும் பூச்சிகளையும், மிருகங்களையும் உண்டாக்கிக் கொள்ளுகிறது. இது சாத்யம், இதன் முன்னேற்றமே மனிதவர்க்கம். அனுகரீகம், பிறகு நாகரீக மனிதர், இந்த பரம்பரையில் வித்யாரண்யர். வித்யாரண்யர் துங்கபத்திரை நதிக்கரையில் ஆச்ரமம் அமைத்துக் கொண்டு வித்யா சங்கரரிடம் சர்வசாஸ்திர தர்மங்களையும் வெளியிட்

டார். உயிரோடு வாழ்ந்த மஹான் வித்யாரண்யரே. மற்றவர்களை ஊஹித்தால் தடயம் கிடைக்க வில்லை. வித்யாரண்யரே தடயம் உள்ள வேதபுருஷர், இவரே புருஷோத்தமர் இவரே அபௌருஷேயர். இவரைப் போல் யாரும் பிறக்க முடியாது. இவர் குருவுக்கு வித்யா சங்கரர் ஆலயத்தை கட்டிவைத்தார். வித்யாரண்யர் ஞாபகார்த்தமாக வித்யா சங்கரர் ஆலயம் கட்டப்பட்டது. மனிதர்கள் ஏன் பிறக்கிறார்கள். யாருக் காக உழைக்கிறார்கள்; எங்கு போய்ச் சேருகிறார்கள். "தற்காலம் மிஷின் களுக்காகப் பிறந்து மிஷின்களே காலதேவதையாக நினைத்து அதற்கு ஓர் உறுப்பாக விளங்குகிறோம் " இப்படி வித்யா சங்கரரும் வித்யாரண் யரும் துங்க பத்திரா நதீதீரத்தில் ஆழ்ந்து வேதபாஷ்யங்களை அனுக்ர ஹித்தார்கள்.

1. வால்மீகி—விச்வாமித்ரயாகத்தில் சுபாஹு, மாரீசனை ராமர் பாணத்தால் அடித்தார். மாரீசனை லவண சமுத்ரத்தில் அமுக்கி, அமுக்கி, விட்டு விட்டார். காமத்தின் ஆரம்பம் ராவணன். மாரீசனை அணுகி மான் உருவங் கொண்டு ஸீதையிடம் அரண்யத்தில் போகச் சொல்லி ராமன் குரல் போல் குரல்கொடுத்து ஸீதையை லவண சமுத்ர மத்தியில் பத்து மாதம் வைக்கிறான்.

2. ரிக்வேதமும், ஸாமவேதமும், மான் உருவங்கொண்டு காமத் தின் வஸ்துவாக கர்ப்பத்தில் பிரகாசிக்கிறது. தகப்பனாரைப் போல் பிள்ளையும்– சப்தம், லவ, குசாள், காமத்தின் தூண்டுதல், காமத்தின் ஆனந்தம், காமத்தின் எல்லை. குரங்குகளைக் கட்டி இழுத்து சீதையிடம் காண்பிப்பது.

3. இப்படி லோகம் நடப்பதை மனிதர்கள் பிறப்பதையும் அனுப விப்பதையும் அவர்கள் காலத்தில் மூழ்குவதையும் திரும்பத் திரும்ப அத்வைதம் என்று அனுக்ரஹித்தார்கள்.

வித்யா சங்கரர் ஆலயம் துங்கபத்திரை நதிக்கரையில் உள்ளது. கிழக்குப்பார்த்த கோவில் 600 வருஷங்களுக்கு முந்தி ஸ்தபதியால் பாறைகளால் கட்டப்பட்டது. முன் மண்டபம் 12 தூண்களால் கட்டப்பட்டது. கிழக்கு சின்னவாசல். சூரிய கிரணம் 12 தூண் களிலும் மாதப் பிறப்பில் விழுகிறது. 12 தூண்கள் ஜாதக ராசியில் 12 கட்டம் போடுவது போல் 12 தூண்கள் இருக்கிறது. அந்த தூண்களில் மேஷம், விருஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்ற ராசி ரூபம் செதுக்கப்பட்டிருக்கிறது. ஸௌரமானப்படி தமிழ் மாதப் பிறப்பு

தூண்களில் சூர்ய ரச்மி விழுகிறது. அந்த ஊரில் சாந்திரமான மாதம் அனுஷ்டிக்கப்படுவதால் ஸ்தம்பத்தில் சூர்யரச்மி விழுவதை அங்குள்ள வர்கள் கண்டுகொள்ள முடிய வில்லை. நமது தேசத்தில் ஸெளரமான மாத, வருஷ அளவு வந்து விட்டால் இங்கிலீஷ் காலண்டர் போய் விடும். தமிழ் தேசத்திலும், மலையாள தேசத்திலும் ஸெளரமான வருஷ அளவு நடகிறது. இங்கிலீஷ் பாஷை போனாலும் காலண்டர் போகாது. வருஷ அளவு $365\frac{1}{4}$ நாள். இதை எழுத்தாளர் கவனிக்கவும்.

## சூர்ய க்ரஹணம்

சூர்ய க்ரஹணம் வரும் தினத்தை சுத்தமாகக் கணிக்கத்தெரிய வேண்டும். கலிசுத்த தினம் கண்டுகொள்ள வேண்டும். கிழமை கண்டுகொள்ள வேண்டும். அமாவாசை திதி முடியும் காலம் பகலில் தெரியவேண்டும். வானத்தில் சூரியன் எங்கு காணப்படும் என்ற ஊஹம் வேண்டும். சந்திரன் ஊர்ந்துவரும் நக்ஷத்ரம், அதன் பாதம் ஊஹத்தில் தெரியவேண்டும். ராகு கணிதம் தெரியவேண்டும். பூச் சாயையில், அல்லது பூ ப்ரஷ்டத்தில் கிரஹணம் என்பது தெரியவேண் டும். பிறகு சூரியக்ரஹண கணிதம் கணிக்க வேண்டும்.

## வே த ர ஸ ம்

வேதமானது தேவாதி தேவனை மஹாதேவனதும் கணங்களுக்கு எல்லாம் பதியான மஹாகணபதியின் நாபியிலிருந்து உண்டானது. முதல் எழுத்து “ ஹ ”. இந்த வேதம் நர்மதைக்கும் கங்கைக்கும் சமீப மான பிந்துவிலிருந்து உற்பத்தியாகி இந்த பரதகண்டத்தின் ஜம்பூத்வீ பம் முழுவதும் பரவி நிற்கிறது. வேதத்தில் முக்கிய விஷயங்களை அறிந்து நமது தேசத்திலேயே சுசியாகவும் ருசியாகவும் நடத்திக் கொண்டு வருகிறார்கள். தமிழர்களின் மத்தியில் ரிக், யஜுர், ஸாம என்ற மூன்று வேதங்களே யாகத்திற்கும் கர்மாக்களுக்கும் வேதபாரா யணத்திற்கும் உபயோகமாக இருந்து வருகிறது. கோயில்களுக்கு யஜுர் வேதத்திலிருந்தும் போதாயன ஸூத்ரத்திலிருந்தும் பூஜா அபிஷேகங் கள் நடந்து வருகிறது. யஜுர் வேதத்திற்கு ரிஷி ஆத்ரேயர். பக்ஷி தித் திரி. இந்த பக்ஷி இந்திரனால் ஏற்படுத்தப்பட்டது. இதற்கு அத்தி மரம் விருட்சம். நமது வேதத்தை படித்தவர்கள் ரிஷியையும் பக்ஷியை யும் விருக்ஷத்தையும் சொல்வதில்லை. ஆனால் வேதத்தில் பலன் இருக் கிறது என்றுதான் சொல்லி வந்தார்கள். அதன் விஷயங்களை மேல் நாட்டார்கள் சிரமப்பட்டு படித்துவிட்டு நமது “முன்னோர்கள் செய்த நூல்கள் ” என்கிறார்கள். சுக்ல யஜுர்வேதமும் படிக்கப்படுகிறது.

## " யாகம் "

வேதம் யாகத்தைச் சொல்லுகிறது — யாகமானது விஷ்ணு என்று சொல்லப்படும் பிரும்மாண் (அ) டத்தைக் குறிக்கிறது. அதன் சரீரத்தில் சூரியன், சந்திரன் முதலான 33 கோடி தேவதைகளும் அஸுரர்களும் மற்றும் நம் மனதில் தோன்றும் ஸர்வ வஸ்துக்களும் இருக்கிறது. இந்த இடத்திற்கு விஷ்ணு என்றும், வேதம் சொல்லுகிறது. நமது சரீரமும் விஷ்ணுதான். ஆனல் பேரியோர்கள் விசாரித்து " நமது " என்பதை அறிய முடியாததால் பிரும்மாண்டமே விஷ்ணு; இந்த விஷ்ணுவின் சரீரத்தில் " நமது " அக்நி இருந்தாகவேண்டும். அதைக் காப்பாற்றுகிறவன் சுடல் காப்பவனே "சிவம்". இந்த சிவம் அக்நியைக் காப்பாற்றும்வரை " நமது " விஷ்ணுவை காப்பாற்ற யாகம் செய்ய வேண்டும். அன்னம் புஜிக்க வேண்டும். விராட்.

## பௌத்தம்

யாகத்தில் பசு கூடாது. அதை வதை செய்து எந்த யஜமானனும் ஸ்வர்க்கம் போகவேண்டாம். அப்படி ஸ்வர்க்கம் போகவேண்டுமானல் தங்கள் பிள்ளையை பசுவாகச் செய்து ஸ்வர்க்கம் போகவும் என்பது. யஜமானன் என்பது லோகபிதா; அதுவே ஆகாசம்; அது தான் ஸ்வர்க்கம். ஆகையால் யாகத்தால் கிராம க்ஷேமம் லோக க்ஷேமமே தவிர ஒரு யஜமானன் ஸ்வர்க்கம் சேரவில்லே. யாகம் எல்லோராலும் தூண்டப்பட்டு செய்யப்படவேண்டிய விஷயம். இதைத் தெரிந்து செய்பவர்கள் கீர்த்திமானுக இருப்பார்கள். பௌத்தம் வேதத்தை திருப்தி செய்ய வில்லே.

## யாக காலம்

யாகத்தைக் காலம் பார்த்து செய்யவேண்டும். "விவாகம், யாகம்" இரண்டும் ஒன்று தான். விஷ்ணு தன் சுவாஸத்தை உள் விட்டு வெளிவிட 60 வருஷங்கள் ஆகிறது. இதை நாம் தெற்கிலிருந்து வடக்கு வரை " ஜனங்கள் வஸிக்கும் வரை " 5 ஆகப் பிரித்து அனுபவிக்க வேண்டும். அதில் 12 வருடங்கள் அகப்படும். அதில் ஒரு வருடத்தில் 6 மாதம் உத்திராயணம். இதில் தான் யாகம் செய்ய வேண்டும். நாம் வானத்தைக் கவனிக்கவேண்டும். சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் கிழக்கிலிருந்து மேற்கே போய்க்கொண்டிருக்கும். ஆனல் சூரியன் சந்திரன் மற்றுமுள்ள ஐந்து கிரஹங்களும் அசுவதியிலிருந்து ரேவதி போயாக வேண்டும். இவர்கள் மேற்கிலிருந்து கிழக்கே யிருக்கும் இராசிகளில் பிரவேசிப்பார்கள். வானத்தில் ஊக்கமாக இரண்டு மாதம் கவனிப்பதால் புலப்படும். நட்சத்திரங்கள் 27-ம் 12 ராசிகளாக பிரிந்து நிற்கும்.

